உ

61

சிவ குகமயம்.



# தனவணிகர் தாலாட்டு.



பிரமாதி ௵ ஐப்பசி மீ.

 இரண்டாம் பதிப்பு [விலை ரூ. 0-0-6

உ

சிவகுகமயம்.

# தனவணிகர் தாலாட்டு.

இஃது

காரைக்குடி வித்வான்

அரு. சிவ. ராம. நா. கோவிந்தன்

செட்டியாரவர்களியற்றியது.




**இரண்டாம் பதிப்பு.**

காபி ரைட்]  1939.  [விலை 0-0-6.

## சாற்றுக்கவி.

வேம்பத்தூர் சிலேடைப்புலி பிர்மஸ்ரீ பிச்சுவையரவர்கள் புத்திரர்
நடேச பாரதியார் பாடிய

வெண்பா.

*பாலாவா வென்றுநிதம் பாவையருந் தாயாருந்*
*தாலாட்டுச் சொல்லித் தனவணிகர்—மேலாகச்*
*செப்பினுன் காரைநகர் செந்தமிழ்தேர் கோவிந்தன்*
*தப்பிதமில் லாதுவந்து தான்.*

பண்டிட் சு. சிதம்பரய்யரவர்கள் மாணுக்கர்
காரைக்குடி சி. முரு. நாராயணனியற்றிய

வெண்பா.

*மக்கள்தமைத் தாயாரும் மற்றவரும் போற்றிசைத்து*
*பக்குவமாய்த் தாலாட்டப் பாட்டதனை-மிக்குயர்ந்த*
*சங்கத் தமிழ்ப்புலவர் தான்மதிக்குங் கோவிந்தன்*
*இங்கிதமாய்ச் செய்தான் இனிது.*

காரைக்குடி அள. சித. சோ. தெய்வராயனியற்றிய

### வெண்பா.

பேர்மிகுந்த மாவணிகப் பிள்ளைகள்கேட் டின்பமுறச்
சீர்மிகுந்த தாலாட்டுச் செய்யுள்தனை—ஏர்மிகுந்த
சான்ருேரும் மற்றவருந் தான்புகழுங் கோவிந்தன்
தேன்போலச் செய்தான் றெளிந்து.

### காப்பு.

ஏர்மிகுந்த மாவணிகர் இன்பமுறும் மக்களுக்கு
சீர்மிகுந்த தாலாட்டுச் செப்பவே—தார்புனைந்த
தந்திமுகத் தோனேநீ தானுவந்து யெந்தனுட
சிந்தைதனில் நின்றுதவி செய்.

### தாலாட்டு.

ராரிரர ராராரோ, ராரிரர ராராரோ
ராரிரர ராராரோ, ராரிரர ராராரோ

ஆனைமுகன் ஆறுமுகன் அன்னைநித்ய கல்யாணி
மானைக் கரத்தேந்தும் மன்னுகயி லாசருடன்
ஞானநட ராஜனொடு நண்ணுசண்டி கேஸ்வரனுந்
தானதிக மென்றுதந்த தாட்டிகனே கண்வளராய்



சம்பந்தர் வாகீசர் தானான சுந்தரருஞ்
செம்பொன்மணி மாடத் திருவாத வூர்வாசன்
அம்புவியை ஆண்ட அரிமர்த்தன பாண்டியற்கு
நம்பிக்கை கொள்ளமைச்ச ராகவந்தார் கேளரசே (2)

பரிவாங்கி வாருமென்று பாண்டியனார் பொன்கொடுக்க
உரிமையுடன் சொக்கேச ருவந்துதிரு நீறளிக்க
சரியெனப் பெருந்துறையிற் றங்குகுருந் தம்நிழலில்
கரியுரித்த கண்ணுதலைக் கண்டுமையல் கொண்டாரே (3)

ஆத்மநா தன்னவர்க்கங் கன்றுபதே சம்புரியத்
தோத்திரப்பா செய்தங்கே சொந்தவிஷ யம்மறந்து
பாத்திரரா யாகிதிருப் பணிநடத்திப் பொன்னையெல்லாஞ்
சேத்திரமென் றெண்ணிச் சிலவழித்து விட்டாரே (4)

மாவாங்கப் பொன்கொடுத்த மந்திரியைக் காணாமல்
கூவாழும் பாண்டியனார் கூட்டிவர ஆளனுப்பத்
தேவாதி தேவர்கண்டு தென்னவன்பாற் செப்புமென்று
மாவாய் நரியை வரவழைத்துச் சென்றாரே (5)

குதிரைதனைச் சொக்கேசர் கொண்டுவரு முன்னாலே
மதுரைதனை யாளரசன் வாசகனைத் தானடிக்கத்
துதிபாட நற்குதிரை தோன்றினது பாண்டியன்முன்
மதியாமற் றான்மதித்து மாறினார் நற்கயிற்றை (6)

நற்பரியைக் கொண்டுசென்று லாயமதிற் சேர்த்தவுடன்
பிற்பகலே யப்பரிகள் பெருநரியா யோடினதும்
வற்றாத வெள்ளம்வர வைகைதனி லூர்ச்சனங்கள்
தெற்றனவே யோடித் திரளா யடைக்கயிலே (7)

அன்பான வந்திபிட்டை ஆலவா யான்விரும்பித்
தன்முதுகிற் கொட்டுந் தலைமீதிற் கூடையுடன்
அன்னைவந்தி யாளெனவே ஆறடைக்க மண்சுமந்து
பின்னுமவள் பிட்டையுண்டு பிரம்படியுங்கொண்டாரே (8)

சண்டாள ரான சமணர்களெண் ணாயிரத்தை
கொண்டுகழு வேற்றிநம்மள் கூர்ஞான சம்பந்தர்
அண்டர்முனி வர்புகழ்சை வாகமம்நால் வேதமதைத்
திண்டாட விட்ட திருமதுரைப் பாண்டியற்கு (9)

தீராச் சுரத்தை திருநீற்றி னால்மாற்றிச்
சீராகக் கூனிமிர்த்துத் தென்னவனைத் தானிதமும்
மாறாமற் சுந்தரனை வாழ்த்திவரச் செய்தமத
வாரணனார் தேவாரம் மாநிலத்திற் கேளரசே (10)

தங்கைமக னைத்தானே தன்மகனாய்க் கூட்டினபின்
கங்கையிலே நீராடக் காரிகையோ டேகினதும்
பங்காளி கூடிப் பரிமுதல்செய் தாரதினால்
நங்கையவள் பிள்ளையுடன் நடுவுரைக்கச் சொக்கேசர் (11)

பூமான்பா லிவ்வழக்குப் போராட்டந் தானடக்கச்
சீமான் றனபதிபோற் றிருவால வாயீசன்
மாமனாய் வந்து வழக்குரைத்து நம்மவற்குச்
சேமமுறச் செய்துவைத்தார் சீராளா கண்வளராய் (12)

இளைசைநகர் மாற்றாரும் எண்வைர வன்கோவில்
வளரிரணி யூருடனே மகிழ்பிள்ளை யார்பட்டி
இளமைநே மம்மிலுப்பை யேர்சூரை வேலநகர்
வளர்ந்தோங்கிச் செல்வமுற மாமணியே கண்வளராய் (13)

செல்வநிறை நம்மவர்கள் சீர்தளிக ளொன்பதிற்குள்
கல்வாச னூட்டிஞயர் காணிளைசை மாநகரில்
சொல்லால்வெல் வல்லரெனத் தொல்கழனி வாசல்மிகச்
செல்வம் பெருகவந்த சீராளா கண்வளராய் (14)

ஒக்கூ ருடையார் உயர்பட் டணசுவாமி
தக்க பெருமருதூர் தாங்கழனி வாசலுடன்
மிக்கபுகழ் கிங்கிணிக்கூர் மிளிர்பேர செந்தூரும்
அக்கரைசிற் சேத்தூரும் ஆனவகுப் பென்பாரே (15)

நந்தவனம் வாழைபலா நற்சூதந் தென்கமுகு
எந்தவிடம் பார்த்தாலும் ஏரிதடா கங்கூபம்
அந்தந்தச் சீர்வகுப்பார்க் கானைமுகன் நற்றளியுஞ்
சுந்தரமாய்த் தானமைத்தார் தொன்றுதொட்டு முன்னோர்கள் (16)

கோதிலா யீசர்தளி கூர்பட் டணசுவாமி
ஆதிகே சப்பெருமா ளமர்பரிம ளவ்வல்லி
நீதியனு மான்வசிக்க நேர்பணிகள் நம்மவர்கள்
சோதிமய மாயமைத்தார் சுந்தரமே கண்வளராய் (17)

சீர்த்திமிகும் மாற்றூரில் சிறந்தவகுப் பேழதனில்
நேர்த்திமிகும் மாமுறையூர் நிகழரும்பாக் கூர்மணலூர்
கீர்த்திமண் ணூர்கண் ணூர் கிளைகருப்பூ ருங்குளத்தார்
பார்த்திபன்போற் றன்விளங்கப் பாலகனே கண்வளராய் (18)

சீர்வைர வன்கோவில் சிறுகுளத்தா ராமுடையார்
பேர்மிகுந்த மூன்றதனில் பெரியவகுப் பாமுதலார்
சீர்மிகுந்த தாங்தெயினார் திகழ்பிள்ளை யார்வகுப்பும்
பேர்மிகுந்து தான்செழிக்கப் பெருமானே கண்வளராய் (19)

மாவாழும் மாங்கழனி வாசலுடை யாருடனே
பூவாழ் மருதேந்திர புரமுடையா ரெல்லோரும்
கூவாழ் வயிரவரைக் கூசாமல் போற்றிநிதம்
பூவாழ வந்துதித்த புண்ணியனே கண்வளராய் (20)

அரனுமையைத் தேவர்களை யனுதினமும் அன்புடனே
சரணஞ் சரணமென்று தவருமற் றன்பணிய
இரணியூர்க் கோவில்நன்கு யென்னாளுந் தான்செழிக்க
வரம்பெற்று வந்துதித்த மாமணியே கண்வளராய் (21)

வெற்றிதரு மெத்தொழிற்கும் மின்னாகத் தோன்றிலங்கும்
கற்பகமா மூர்த்திதனைக் கைகூப்பித் தான்பணிய
அற்புதஞ்சேர் நற்பிள்ளை யார்பட்டி தான்விளங்க
நற்பொருளாய் வந்துதித்த நவமணியே கண்வளராய் (22)

பாமணக்கும் முத்தப்பன் பாவலனார் வாக்குமிக
சேமமுற்று ஓங்கிவரத் தேனாறு சூழ்ந்திலங்கும்
நேமநகர்ச் சோழீசர் நேர்மையுடன் தந்ததிருக்
கோமகனே எங்கள்குலக் குஞ்சரமே கண்வளராய் (23)

எப்பொழுதுந் தான்றோன்றி ஈஸ்வரனா ரம்மையையும்
தப்பாமல் போற்றிமுன்னோர் தான்செய்த புண்ணியத்தால்
செப்புமினுப் பைக்குடியார் செழித்தோங்கித் தான்மகிழ
ஒப்புடனே வந்துதித்த ஓவியமே கண்வளராய் (24)

சீரை விடாதிலங்குந் தேசிகனா ராவுடையாள்
பேரை மனதினிலே பெட்புடனே தானினைக்கச்
சூரைக் குடிநகரஞ் சுந்தரம்போற் றுந்துலங்கிப்
பேரை விளக்கவந்த பெருமானே கண்வளராய் (25)

எண்டிசைக்கு மய்யமதி லிலங்கியருள் தான்சொரியும்
கண்டீசர் காமாட்சி கடவுளரைத் தான்மனதிற்
கொண்டவுடன் வேலங் குடிநகரந் தான்செழிக்க
மண்டலத்தில் வந்துதித்தமரகதமே கண்வளராய் (26)

ஆரணமும் ஆகமமும் அம்பிகையீ சன்றளியும்
நாரணனும் அந்தணர்கள் நற்றளியும் சீருடனே
சீரணைத் தாரணந்தான் செய்வதற்கென் றேபிறந்தார்
தாரணியில் நம்மவர்கள் தவமணியே கண்வளராய் (27)

நந்தாத சத்திரமும் நல்லவண்டிப் பாதைகளும்
விந்தைமிகும் பள்ளி விளங்குநீர்ப் பந்தர்களும்
சிந்தையுவந் தேயுலகிற் செய்தபெரும் புண்ணியத்தால்
வந்துதித்த குஞ்சரமே மாமயிலே கண்வளராய் (28)

கொண்டுவிற்க ரெங்கோன்சை கோன்பினாங்கு சிங்கைசியாம்
கண்டிகொழும் பாம்டில்லி கடல்தாண்டிக் கப்பல்தனில்
எண்டிசையுஞ் சென்றுபொரு ளிட்டமுடன் றேடிவர
மண்டலத்தில் வந்துதித்த மரகதமே கண்வளராய் (29)

பாரிலுயர் சேரனுடன் பாண்டியநற் சோழநகர்
சீரிலுயர் காசிமுதற் றிகழ்காம தேனுமடம்
பாரிலமைத் தும்பர்தொழும் பார்வதிநா தற்கீய்ந்து
வாரியமு தொப்பவந்த மாமணியே கண்வளராய் (30)

அரசமரம் வேம்புடனே ஆனைமுக னைத்தினமுந்
திரமாகச் சுற்றிவந்து தெண்டனிட்டுப் பொங்கல்வைத்து
சுரபிகட்குப் புற்கொடுத்துந் தூயமகப் பால்கொடுத்தும்
வரத்தாலே பெற்றெடுத்த மாமணியே கண்வளராய் (31)

பூவிலுயர் கொப்புடையாள் பொய்சொல்லா மெய்யருடன்
தேவிமீ னாக்ஷிசொக்கர் திகழ்முத்தாத் தாளடியிற்
மாவிளக்கு அர்ச்சனைகள் மாலையிட்ட புண்ணியத்தால்
பூவுலகை யாளவந்த புண்ணியனே கண்வளராய் (32)

மிக்கபுகழ் குன்றைநகர் வேலவற்குப் பூசமதில்
சக்கரையாற் காவடிகள் தானெடுத்து அன்னமது
எக்குலத்தா ருக்குமகிழ்ந் தீந்ததவப் புண்ணியத்தால்
பொக்கிஷத்தை யாளவந்த பொன்மணியே கண்வளராய் (33)

தூங்காமற் கண்விழிப்பாய் சுந்தரனே பால்குடிக்கப்
பாங்கிமா ருன்னைவந்து பாராட்டி முத்தமிட்டு
பூங்கரத்திற் காப்பணிந்து பொட்டிட்டு மையெழுதப்
பாங்குடனே வந்திருக்கார் பாலகனே கண்விழிப்பாய் (34)

தந்திமுகன் வேல்வாழி சத்திசிவன் மால்வாழி
செந்திருமின் வாழிதிருத் திசைமுகனும் நாமகளும்
அந்தணரும் இக்கவிதை ஆக்கியகோ விந்தனுடன்
சந்ததமுங் கற்புடையார் சகலர்களும் வாழி[illegible] (35)

———

சுபம்





**பெண்பிள்ளையானால் இவ்வாறு மாற்றித் தாலாட்டுக.**

| பாட்டு நம்பர். | வரி | |
|---|---|---|
| 1 | 4 | தானதிக மென்றுதந்த தவக்கொடியே கண்வளராய் |
| 2 | ,, | நம்பிக்கை கொள்ளமைச்ச ராகவந்தார் பெண்மயிலே |
| 10 | ,, | வாரணனூர் தேவாரம் மாநிலத்திற் கேளணங்கே |
| 12 | ,, | சேமமுறச் செய்துவைத்தார் சீதேவி கண்வளராய் |
| 14 | ,, | செல்வம் பெருகவந்த திருமகளே கண்வளராய் |
| 18 | ,, | பார்த்திபன்போற் ருன்விளங்கப் பாலகியே கண்வளராய் |
| 19 | ,, | பேர்மிகுந்து தான்செழிக்கப் பெண்மணியே கண்வளராய் |
| 20 | ,, | பூவாழ வந்துதித்த பொற்கொடியே கண்வளராய் |
| 23 | ,, | கோமகளே எங்கள்குலக் குஞ்சரியே கண்வளராய் |
| 25 | ,, | பேரை விளக்கவந்த பெருவாழ்வே கண்வளராய் |
| 28 | ,, | வந்துதித்த குஞ்சரியே மாங்குயிலே கண்வளராய் |
| 29 | 3 | ............... ............... ............... தேடிவரும் |
| | 4 | மண்டலத்து, ராஜருக்கு வாழவந்த பெண்மானே |
| 32 | ,, | பூவுலகை யாளவந்த பூங்கொடியே கண்வளராய் |
| 34 | 1 | ............... ............... சுந்தரியே ............... |
| | | ............... ............... ............... ............... |
| | | ............... ............... ............... ............... |
| | 4 | பாங்குடனே வந்திருக்கார் பாலகியே கண்விழிப்பாய் |

